12th August 1960]

அனுமதி கொடுக்க முடியாது என்று ரெஜிஸ்ட்ரார் சொல்லுகிறார். ஆகவே பக்கத்திலுள்ள கிராமங்களைச் சேர்ப்பதற்கு அனுமதி கொடுக்கும்படி அமைச்சர் அவர்கள் ரெஜிஸ்ட்ராருக்கு உத்தரவு போடுவார்களா?

THE HON. SRI R. VENKATARAMAN : இந்தத் திட்டத்தை விஸ்தரிப்பதற்கு நமக்கு அதிகாரமில்லை. நமக்கு இப்போதுள்ள நிலையில் விவசாய பாங்குகளை விஸ்தரிப்பதற்கு முடியாது. இதனால்தான் இதை விஸ்தரிப்பதற்கு அனுமதி கொடுக்க முடியவில்லை. சென்னை ராஜ்யத்தைப் பொறுத்த அளவில் விவசாய பாங்குகள் நல்ல சேவை செய்திருக்கின்றன என்பதை எடுத்துச் சொன்னோம். ஆனால் அகில இந்திய அடிப்படையில் ஒரு கிராமத்திற்கு ஒரு சொஸைட்டி இருக்கவேண்டும் என்று முடிவு செய்திருக்கிறார்கள்.

*T.I. Cycles Factory, Ambathur*

*124 *Q.*—SRI S. PAKKIRISAMI PILLAI : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether the workers of the T.I. Cycles Factory, Ambathur have gone on a strike; and

(*b*) the steps taken by the Government to bring about a reconciliation?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) Yes, Sir. The workers went on a strike from 11th May 1960.

(*b*) The Commissioner of Labour, Madras, held discussions with the parties and as a result, a settlement was reached on 28th June 1960, in respect of all the outstanding issues in dispute. Normal work was resumed in the factory from 29th June 1960.

SRI S. PAKKIRISAMI PILLAI : இந்தத் தொழிலாளர்கள் தங்களுக்கு அட்ஜுடிகேஷன் வேண்டுமென்று கேட்டதற்கு ரீகன்ஸிலேஸேஷன் தோரணையில் ஒரு ஒழுங்கு நிலையை ஏற்படுத்தினர்கள். ஆனால் அட்ஜுடிகேஷனுக்கு விட்டிருந்தால் இப்போது கிடைத்திருப்பதைவிடக் கூடுதலாக கிடைத்திருக்கும். ஆகவே அட்ஜுடிகேஷனுக்கு விடாததின் காரணமென்ன என்பதை அமைச்சர் அவர்கள் விளக்குவார்களா?

THE HON. SRI R. VENKATARAMAN : ஜோஸ்யம் செய்வதில் யாருக்கும் எல்லை கிடையாது. அட்ஜுடிகேஷனுக்கு விட்டிருந்தால் இன்னும் அதிகமாகக் கிடைத்திருக்கும் என்று அங்கத்தினர் எண்ணுவதற்கு என்ன ஆதாரம் இருக்கிறது என்று எனக்குப் புரியவில்லை. அதோடு அட்ஜுடிகேஷனுக்குப் போயிருந்தால் இதைவிட இன்னும் குறைந்து போயிருக்காது என்று எப்படி நம்மால் உறுதி சொல்ல முடியும்? நேரிடையாக எவ்வளவு தூரம் தொழில் தகராறுகளில் தலையிட்டு தீர்த்துவைக்க முடியுமோ அவ்வளவு தூரம் தீர்த்து வைக்கவேண்டும் என்பதுதான் சர்க்காருடைய கொள்கையாகும். அதே முறையில்

இதில் நானும் லேபர் கமிஷனர் அவர்களும் இதில் கலந்து முடிவு எடுத்தோம். அதோடு இந்த ஒப்பந்தம் ஏற்பட்டதற்காக அந்தத் தொழிலாளர்கள் வெற்றி விழா கொண்டாடியிருக்கிறார்கள். அப்படியிருக்கும்பொழுது, கனம் அங்கத்தினர் அவர்களுக்கு இதில் எப்படி வருத்தம் ஏற்பட்டது என்று எனக்குப் புரியவில்லை.

### *Tapioca*

* 125 *Q.*—SRI N. K. PALANISAMI: Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether the Tariff Commission has recommended the formation of a co-operative society for Tapioca Tubers in this State as purchasing and distributing agency for finished products; and

(*b*) if so, the steps taken thereon?

THE HON. SRI R. VENKATARAMAN: (*a*) Yes, Sir.

(*b*) Preliminary enquiries made by the Co-operative Department disclose that the scope for the formation of a co-operative society on the lines suggested by the Tariff Commission is limited. However, an Assistant Director of Industries has been appointed recently at Salem to be exclusively in charge of the development of the Sago Industry. He is being asked to explore once again the chances of organizing a co-operative society in respect of sago manufacture.

SRI N. K. PALANISAMI: ஸார், இந்த டாப்பியோக்காவிற்கு போட்டி தென் ஆப்பிரிக்காவிலிருந்து வருகிறது. நமது டாப்பியோக்காவை வெளிநாட்டுக்கு அனுப்பவும், இருக்கக் கூடிய போட்டியைத் தவிர்க்கவும் சர்க்கார் ஏதாவது நடவடிக்கை எடுத்திருக்கிறார்களா?

THE HON. SRI R. VENKATARAMAN: எனக்கு அந்த விதமான தகவல் இல்லை. அங்கத்தினர் எழுதி அனுப்பினால் அதைப் பரிசீலனை செய்கிறேன்.

### *Beedi Industry.*

* 126 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN:<br>SRI A. A. RASHEED: } Will the Hon. the Minister for Industries be pleased to state the details of the talk that the Minister had with the beedi workers on 25th June 1960.

THE HON. SRI R. VENKATARAMAN: It will not be in the public interest to give the details of the talks which the Minister for Industries had with the representatives of the beedi employees on 25th June 1960, as a satisfactory settlement has been reached on the payment of minimum wages in the beedi industry and the licensing of beedi establishments under the Madras Beedi Industrial Premises (Regulation of Conditions of Work) Act, 1958.